துறந்து, செய்யரானூர் சிந்தையானே"[1] என்றும், "அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற் றைம்புலனு மடக்கி ஞானம் புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராணர்"[2] என்றும், 'தேனுமா யமுதாகி நின்றான் தெளிசிந்தையுள்"[3] என்றும், "கழலுன்னி எண்ணுந் தனையும் அடியாரேத்த அருள் செய்வான், உண்ணின்றுருக வுவகை தருவார்"[4] என்றும், "உரிமையுடைய அடியார்கள் உள்ளூற வுள்கவல்லார்கட்கு, அருமையுடையன காட்டி அருள் செயும் ஆதிமுதல்வர்"[5] என்றும் இவ்வாறு பலவிடத்தும் கூறுவர். "அருமை யுடையன காட்டி யருள் செயும்" என்றது, 'நாயினேற்கே காட்டாதன வெல்லாம் காட்டிப் பின்னும், கேளாதன வெல்லாம் கேட்பித் தென்னை, மீட்டேயும் பிறவாமற் காத்தாட்கொண்டான்"[6] என்ற மணிவாசகத்தை நினைப்பிக்கின்றது.

இனி, இறைவன் உயிர்கட்கு உவகைதரும் நெறியினை யுணர்த்தி, மக்களை அந்நெறிக்கண் நிறுத்தி இன்பம் பெறுவிக்க வேண்டுமென்ற கருத்தால், "உள்ளம் உருகில் உடனுவர்"[7] என்றும், 'தேனுமாயமுதாகி நின்றான் தெளிசிந்தையுள்"[8] என்றும் இவை போல்வன பலவும் பல பதிகங்களில் எடுத்துக்கூறி வற்புறுத்துகின்றார். உள்ளம் உருதற்கேதுவாகிய அன்பும், சிந்தைத் தெளிவும் பெறுவது எங்ஙனம்? சிந்தைக்கண் தெளிவு பிறக்கின், இறைவன் தேனும் அமுதுமாய் இன்புறுத்துவன்; அதனால் அவன்பால் அயரா அன்பு செய்தால், அது காரணமாக அவன் உடனாய் நிற்கும் நிலையுணர்ந்து அவன் பணியென நிற்கும் அருள்வழி யொழுக்கம் கைகூடும்; வினை நீக்கமும் வீடுபேறும் உண்டாம்.

சிந்தையில் தெளிவு நிகழாமைக்குக் காரணம் இயற்கையாகிய உயிரறிவும் செயற்கையாகிய கல்வியறிவாம் பாசவறிவும் முனைத்து நிற்பதேயாகும். இவ்விருவகை யறிவும்

(1) 50 : 4. (2) 132 : 6. (3) 146 : 6. (4) 196 : 7.
(5) 203 : 10. (6) சதக : 28. (7) 247 : 3. (8) 245 : 6.

முதல்வனைக் காண்டற்குத் துணைசெய்வன அல்ல அவனுடைய திருவடி ஞானமே துணையாவது. அந்த ஞானத்தாலே சிவபெருமானைச் சிந்தைக்கண் நாடி அவன்; உயிர்களிடையே ஒன்றாயும் உடனாயும் நிற்றலை யுணர்தல் வேண்டும். ஒன்றி உடனாய் நின்று, காணும் கண்ணுக்குக் காட்டியும் உடனிருந்து கண்டும் உயிர் ஒழுகு மாறுபோல, பரமன் உயிர்கட்கு அறிவினை அறிவித்தும் அறிந்தும் உபகரிக்கும் உண்மையை யுணர்தல் வேண்டும். அவன் அறிவித்தாலன்றி உயிர்கள் அறியமாட்டாவாய் இருக்கின்றன என்பதை யுணருமிடத்து அவனது திருவருள் கண்ணாகக் காணும்திறம் புலனாகும். அக்குறிப்புத் தோன்றப் பிள்ளையார், "மண்ணிடை வாழும் உயிர்க்கெல்லாம் கண்ணனே"[1] என்றும், "வானவரோடு மனிதர்க்கும் கண்ணினை"[2] என்றும், "கண்ணவார் கருத்தனார்"[3] என்றும் ஓதுகின்றார்.

இவ்வாறு, அவனது திருவருளே கண்ணாக அம்முதல்வனையும் அவனை இன்றியமையாமையையும், அறிவுக்கறிவாய் நின்று அறிவித்தருளும் அவனது அருள் நலமும் உயிர்கள் அறியுந்தோறும் பசுபோதம் கெடுதலால் வற்றாத பேரின்பம் சுரக்கும்: அதனால் அவன்பால் பேரன்பு செலுத்தும் தன்மையுண்டாகிறது. அந்த அன்பால் அம்முதல்வனது நினைவே உயிர்கட்கு நிகழ்ந்தவண்ணமிருக்கிறது. அதனால், முதல்வன் தன்பால் ஒன்றாயும் உடனாயும் நின்று இயக்குவதால், தன் கருவிகரணங்கள் தொழிற்படுகின்றன என்னும் உண்மையுணரப்படுகிறது. அவ்வுணர்வு, தன் செயலென ஒரு செயலும் உயிர்க்கில்லை யென்னும் உயர்நிலையைப் பயந்துவிடுகிறது. உயிரறிவு தன் தன்மைகெட்டு முதல்வன் அறிவொளியில் ஒன்றியுடனாதலால், அவ்வுயிரறிவை மறைத்து நின்ற மலவிருள் நீங்குகிறது. ஆகவே மலநீக்கமும் உண்மையறிவும் பொருந்திய சிந்தை தெளிவெய்துவதால், முதல்வனது திருவருள் ஞானம், தேனும் அமுதுமாய் இன்புறுத்த, இறவாத

(1) 151 : 3. (2) 150 : 9. (3) 322 : 1.

இன்ப அன்பு உயிர்க்கு இறைவன்பால் உண்டாகும். ஆனதுபற்றியே பிள்ளையார், "உருகுவா ருள்ளத் தொண்சுடர், தனக்கென்றும் அன்பராம் அடியார்கள் பருகு மாரமுது"[1] என்றும், "ஊனமிலராகி யுயர்நற்றவ மெய் கற்றவை யுணர்ந்த அடியார், ஞானமிக நின்றுதொழ நாளும் அருள்செய்ய வல நாதன்"[2] என்றும், "ஞானத்திரளாய் நின்ற பெருமான் நல்ல அடியார்மேல், ஊனத்திரளை நீக்குமதுவும் உண்மைப் பொருள் போலும்"[3] என்றும் ஓதியருளுகின்றார். இறைவனை, அவன் திருவடி ஞானத்தாலே வழிபட வேண்டியிருத்தல் பற்றி, "ஞானமாமலர் கொடு நணுகுதல் நன்மையே"[4] என்றும், "ஊனத்திருள் நீங்கிட வேண்டில், ஞானப்பொருள் கொண்டடி பேணும்"[5] என்றும் அருளுகின்றார். அன்பால் நினைவாரது உள்ளத்தில் இறைவன் எழுந்தருளுதலால், ஊனத்திருள் எனப்படும் மலவிருள் நீங்குகிறது; அது நீங்குதலால் ஞானவொளியே நிலவுதல்கண்டு, "ஏம மனத்தராய், இகழா தெழும் தொண்டர், தீபமனத்தார்கள் அறியார் தீயவே"[6] என்று பிள்ளையார் ஓதுகின்றார். ஞாயிற்றின்முன் இருள் நில்லாமையால், அவ்விருளை ஞாயிறு அறியாதொழிதல்போல தீபமனத்தார் முன் தீய பயக்கும் மலங்கள் நில்லாமையால், "அறியார் தீயவே" என்று இயம்புகின்றார்.

இக்கூறிய நலங்கேட்டு வழிபாட்டின்கண் மனம் வைப்பவர்க்குத் தெளிவும் உண்மையறிவும் அன்பும் உண்டாதற்குப் பிள்ளையார் ஒருநன்னெறியை யுணர்த்துகின்றார்: இறைவன் உயிர்க்கு அருள்செய்யும் முதல்வனாதலை யறிந்து அவனை வழிபடுவோர் வழிபாட்டின்கண் ஒன்றிய மனமுடையராதல் வேண்டும். "என்றென்று நினைந்தவர் தம்பால், உள்ளமின்று மகிழ்ந்தவனாராம்"[7] என்றும், "நெஞ்சொன்றி நினைந்தெழுவார்மேல் துஞ்சும் பிணியாயின தாமே"[8] என்றும் "நெறிகொள் சிந்தையராகி நினைபவர் வினைகெட நின்றார்"[9] என்றும் கூறுவர். நெறிகொள்வதாவது, பல்பொருள்மேலும் சென்று

(1) 245 : 5. (2) 329 : 3. (3) 69 : 3. (4) 284 : 7. (5) 58 : 3
(6) 86 : 8. (7) 37 : 2. (8) 38 : 4. (9) 229 : 7.

அவற்றாற் பெறலாகும் சிற்றின்பம் வேண்டி யலைகின்ற மனத்தை இறைவன்பால் செலுத்துதல். "செப்ப நெஞ்சே நெறிகொள் சிற்றின்பம், துப்ப னென்றது; அருளே துணையாக ஒப்பர்"[1] என்று பிள்ளையார் கூறுதல்காண்மின். சிற்றின்ப நாட்டத்தால் சிவன் திருவடியை மறந்து நீங்குதல் பற்றி "மறவியென் சிந்தனை மாற்றி வாழவல்லார் தமக் கென்றும் பிறவியறுக்கும் பிரானுர்"[2] என்று ஞானசம்பந்தப் பிள்ளையார் நட்புற வுரைக்கின்றார்.

இவ்வாறு மறக்கும் மனத்தினை மாற்றி இறைவன் திருவடியில் ஒன்றி நினைப்பார்க்கு அவரது உள்ளத்து மாசினைப் போக்கி இம்மையின்பமும் மறுமை நலமும் அருளுவர் என்று பிள்ளையார் அறிவுறுத்துகின்றார். "உள்ளமார்ந்த அடியார் தொழுதேத்த வுகக்கும் அருள் தந்து எம், கள்ளமார்ந்து கழியப் பழி தீர்த்த கடவுள்"[3] என்றும், "கள்ளநெஞ்ச வஞ்சகக் கருத்தை விட்டு அருத்தியோடு, உள்ள மொன்றி யுள்குவார் உளத்துளான்"[4] என்றும், "நெஞ்சமிது கண்டு கொள் உனக்கென நினைந்தார் வஞ்சமது அறுத்தருளும் மற்றவனை"[5] என்றும் பல விடத்தும் பரிந்து பேசுகின்றார். இவ்வாறு அவன் திருவடியை இடையறாது எண்ணுவோர், "உலகினில் பிறிது இரைபெறும் உடல் பெறுகுவ தரிது"[6] என்பர்; "பிறி திரை பெறும் உடல் பெறார்" எனவே, சிவபோகம் துய்க்கும் சிவஞான வுடம்பு பெறுதல் பெற்றாம்.

இனி, அவர்கள் இம் மண்ணுலகில் பெறும் பயனைக் கூற லுற்ற பிள்ளையார், திருவிழிமிழலைத் திருவிராகப் பதிகத் தின்கண் விரியக் கூறுகின்றார். இறைவனை ஒன்றிய மனத் தோடு வழிபட்டு நினைப்போர், 'அலர்மகள் மலிதர அவனியில் நிகழ்வர்'; அவரே "இருநிலம் இதன்மிசை எழில்பெறும் உருவினர்"; "கலைமகள் தலைமகன் இவன்என வருவர்"; "மாடமர் சனம் மகிழ்தரும் மனமுடையவர்"; "புகழ்மகள்

(1) 28 : 1 (2) 203 : 8. (3) 2 : 7. (4) 237 : 6. (5) 169 : 5. (6) 122 : 2.

துணையினர்"; "அன்றினர் அரியென வருபவர்"; "கரம்பயில் கொடையினர்"; "ஒருங்கிய உணர்வினொடு ஒளிநெறி செலு மவர்" "அடியவர் குழுமிட அவனியில் நிகழ்பவர்"; "மன் மதனென ஒளிபெறுவர்"[1] என்று கூறியருளுகின்றார்.

இவ்வாறு இறைவனை வழிபட விளையும் பல நன்மை களை யுணர்த்திப் போந்த ஞானசம்பந்தப் பிள்ளையார் திருமுன், சிலர் தோன்றி உண்மையாகவே தம் உள்ளத்தில் எழுந்த ஐயங்களைத் தெரிவிக்கலாயினர்கள். அவர்கட்குத் தக்க விடைகளை நெஞ்சின்மேல் வைத்துப் பிள்ளையார் உரைத் தருளுகின்றார்.

உயிர் நின்று உலவும் இவ்வுடம்பு, நிணம், குடர், தோல், நரம்பு, என்பு முதலியவற்றாலாகிய ஆக்கையாகும்; இதன் கண் குற்றம் மலிந்திருக்கிறதேயன்றிக் குணமில்லை. குணமே நிறைந்த இறைவனைக் குற்றமே நிறைந்த உடம்புகொண்டு செய்யும் வழிபாடு எவ்வாறு பயன் விளைக்கும் என்பது அவர்கள் முதற்கண் கொண்ட ஐயம். "இவ்வாற்றால் உடம்பு நிலையற்றதாயினும், குணமும் குற்றமும் நிறைந்த உடம்பு டைய வானவரும் தானவரும் வழிபட்டு உய்தி பெறுகின் றார்களன்றே; ஆதலால் நீவிரும் உய்திபெறலாம்; ஐயத்தால் மையல்கொண்டு அஞ்சவேண்டா" என்பாராய்ப் பிள்ளையார்,

"நிணங்குடர் தோல்நரம் பென்புசே
ராக்கைதான் நிலாயதன்றால்
குணங்களார்க் கல்லது குற்றம் நீங்
காதெனக் குலுங்கினையே;
வணங்குவார் வானவர் தானவர்
வைகலும் மனங்கொடேத்தும்
அணங்க னாரூர் தொழு துய்யலாம்
மையல்கொண் டஞ்சல் நெஞ்சே"

என்று உரைக்கின்றார். 'இவ்வாறு பிறவியால் துன்ப முண் டாதலால், அது காட்டி மயக்கும் இன்பத்தை விரும்பாது

(1) 124.

துறவுபூண்டார்க் கன்றி ஏனையோர்க்குத் துன்பம் நீங்குமாறில்லை; ஆதலால் வழிபாடு துன்பம் நீக்குவது யாங்ஙனம்?' என்று அடுத்தபடி எழுந்த ஐயத்தை நீக்குவார், வழிபாடு ஒன்றே துன்பத்தைத் துடைக்கும் நன்னெறியாம் என்று அறிவுறுக்கின்றார். "திறங்கொண்ட அடியார்மேல் தீவினை நோய் வாராமே, அறங்கொண்டு சிவதன்மம் உரைத்த பிரான்"[1] என்று பிறிதோரிடத்து உரைத்துள்ளவாறே, ஈண்டும், அம்முதல்வன் அறக்கடவுளாதலால், வழிபடுவார் நோயை நீக்கி இன்பம் செய்வன் என்பாராய்,

"பிறவியால் வருவன கேடுள
வாதலால் பெரியஇன்பத்
துறவியார்க் கல்லது துன்பநீங்
காதென்றந் நாங்கிறையே
மறவல்நீ மார்க்கமே நண்ணியைய்த்
திர்த்தநீர் மல்குசென்னி
அறவ னூர் தொழுதுய்யலாய்
மையல்கொண் டஞ்சல் நெஞ்சே"[2]

என்று தெருட்டுகின்றார்.

இவ்வாறு தெளியத் தகுவனவற்றைத் தெளியவுரைத்தும் தெருளாது பிணங்குவோரை, "உருவிலான் பெருமையை உளங்கொளாத அத் திருவிலார் தங்களைத் தெருட்டலாகுமே"[3] "பேச்சினாலுமக் காவதென் பேதைகாள் பேணுமின்"[4] என்று கழறிக் கூறி நெறிப்படுத்துகின்றார்.

இதனாலும் தெருளாது நீங்குவோரை ஏனை நன்மக்கள் கண்டு அருவருத்தாராக, பிள்ளையார், "அன்றின்றொடென்றும் அறிவானவர்க்கும் அறியாமை நின்ற அரன்"[5] ஆதலால் அவரைப் பரவுவோரும் பழித்து இகழ்வோருமுண்டு; அவரை இகழன்மின் என்பார் இறைவனுர், "பரவுவாரையும் உடையார் பழித் திகழ்வாரையும் உடையார்"[6] என்று கூறியருளு

(1) 179 . 6. (2) 215 : 3, 5. (3) 272 : 2. (4) 145 : 1.
(5) 224 : 4. (6) 230 : 5.

கின்றார். இவ்வண்ணமே, பிணங்கி நிற்கும் பௌத்தரையும் சமணரையும் வெதுளாதீர்கள் என்று அறிவுறுத்துகின்றார்; அவர் கூறும் சொற்களைக் கேட்டுப் பிணங்கும் நம்மவரையும் நோக்கி, "ஆதர் அமணொடு சாக்கியர் தாஞ்சொல்லும் பேதைமை கேட்டுப் பிணக்குறுவீர் வம்மின், நாதனை நல்லூர்ப் பெருமணம் மேவிய, வேதன தாள் தொழ வீடு எளிதாமே"[1] என்றும், அச்சமண புத்தர்களால் தொழப்படும் தேவராலும் நம் இறைவன் தொழப்படுவான் என்பார், "மூடிய சீவரத்தார் முதுமட்டையர் மோட்டமணர், நாடிய தேவரெல்லாம் நயந்தேத்திய நன்னலத்தான்"[2] என்றும் கூறி நல்வழியருளுகின்றார்.

இனி, தாம் பாடியருளிய திருப்பதிகங்களால் மக்களை இருவகுப்பினராகக் கொண்டு ஒருதிறத்தாரைப் பெரியோ ரென்றும் ஒருதிறத்தாரைச் சாதாரண மக்களென்றும் கருதித் தாம் உரைக்கக் கருதும் நல்லுரைகளை உரைத்தருளுகின்றார். பெரியோராவார் புலன்களை அடக்கி அறுவகைக் குற்றங்களைக் கடிந்து இறைவனை ஞானக்கண்ணினால் தம்முள்ளே கண்டு அவனோடு ஏகனாகி இறை பணி நிற்பதும், அவன்பால் அயரா அன்புகொண்டு மறவாது ஏத்துவதும் செய்வோராவர். அவர்கட்குத் தாம் உரைக்கவேண்டுவதொன்று மின்மையின், பிள்ளையார் அவர்தம் செயலை எடுத்துப் பாராட்டி அதனைக் காணும் பிறரும் அப் பெரியோர் பெருமை யறிந்து வழிபட்டொழுகுமாறு செய்தருளுகின்றார். "கற்றல் கேட்டலுடையார் பெரியார் கழல் கையால் தொழுதேத்தப், பெற்ற மூர்ந்த பிரமாபுர மேவிய பெம்மா னிவனன்றே"[3] "பெரியார் கழலென் றுந் தொழுதேத்த, உள்நிலாவி அவர் சிந்தையின் நீங்கா ஒருவன்"[4] "ஞானிகளா யுள்ளார்கள் நான்மறையை முழுதுணர்ந்து ஐம்புலன்கள் செற்று, மோனிகளாய் முனிச்செல்வர் தனித்திருந்து தவம்புரியும் முதுகுன்றமே"[5] "ஊனமிலராகி யுயர்நற்றவமெய் கற்று அவை யுணர்ந்த அடியார், ஞான

(1) 383 : 10. (2) 317 : 10. (3) 1 : 2. (4) 2 : 3. (5) 131 : 10.

மிக நின்று தொழ நாளும் அருள் செய்யவல நாதன்"[1] என்பன முதலிய திருப்பாட்டுக்களால் அப்பெரியார் பெருமையை எடுத்தோதுவதைக் காணலாம். ஏனையெல்லாரையும் நோக்கி ஏனைப்பதிகங்கள் பலவற்றையும் அருளிச்செய்கின்றார். பெரியோர் பெருமையும் செயலும் கண்டு தம்மாட்டாமையால் வருந்துவோரை நோக்கி,

சாநாளும் வாழ்நாளும் தோற்றம் இவை
சலிப்பாய வாழ்க்கை யொழியத் தவம்
ஆமா றறியா தலமந்து நீர்
அயர்ந்தும் குறைவில்லை; ஆனேறுடைப்
பூமாண் அலங்கல் இலங்கு கொன்றைப்
புனல்பொதிந்த புன்சடையினா னுறையும்
தூமாண் கடந்தைத் தடங்கோயில் சேர்
தூங்கானை மாடம் தொழுமின்களே "[2]

என்றும்,

"சீர்கெழு சிறப்போவாச் செய்தவ நெறிவேண்டில்
ஏர்கெழு மடநெஞ்சே! இரண்டுற மனம்வையேல்;
கார்கெழு நறுங்கொன்றைக் கடவுளதிடம் வகையால்
பார்கெழு புகழோவாப் பருப்பதம் பரவுதுமே "[3]

என்றும் இவைபோல்வன பலவும் பிள்ளையார் உரைப்பதைக் காண்கின்றோம். எல்லோரையும் தம்மோடு உளப்படுத்தி, இறைவனை வணங்கி வினைப்பகையைக் கெடுப்போம் என்பவர், கேளாது அயல்நெறிகளிற் செல்வோரைப் "பேய்த்தேர்ப்பின் குடங்கொண்டு நீர்க்குச் செல்வார் போதுமின்"[4] என்று விலக்கிவிடுகின்றார்.

எல்லோரும் சூழ்ந்துநிற்ப, இறைவனை வழிபாடுற்ற பிள்ளையார், "அவர் அனைவரும் தாம் செய்யும் வழிபாட்டில் பிணிப்புண்டு நிற்றற்பொருட்டு, "அவ்வினைக் கிவ்வினையாம் என்று சொல்லும் அஃதறிவீர், உய்வினை நாடாதிருப்பதும் உந்தமக் கூனமன்றே, கைவினை செய்து எம்பிரான் கழல்

---

(1) 329 : 3. (2) 59 : 3. (3) 118 : 6. (4) 118 : 10.

போற்றுதும் நாம் அடியோம்"[1] என்று உரைக்கின்றார். நாம் அடிமைகளாதலின், இறைவனுக்குக் கைவினை செய்வதன்றிப் பிறிதொன்றும் செய்தற்கில்லோம் என்றற்குக் "கைவினை செய்து எம்பிரான் கழல் போற்றதும்" என்று அருளியிருத்தலைக் காண்மின். அக் கைவினைகள் இவை யென்று கூறுவார், "காவினை இட்டும் குளம்பல தொட்டும் கனிமனத்தால், ஏவினையால் எயில்மூன் றெரித்தீர்! என்று இருபொழுதும், பூவினைக் கொய்து"[2] இறைவன் திருவடியைப் போற்றுவதாகும் என்கின்றார்.

இனி, வழிபடுங் காலத்து வழிபடும் தமது மனக்கருத்தின் நிலைமையை விளக்கி,

"மறக்கும் மனத்தினைமாற்றி யெம்ஆவியை வற்புறுத்திப்
பிறப்பில் பெருமான் திருவடிக்கீழ் பிழையாதவண்ணம்
பறித்த மலர்கொடு வந்துமை யேத்துதும் நாமடியோம்
சிறப்பில் இத்தீவினை தீண்டப்பெறு திருநீலகண்டம்"[3]

"கருவைக் கழித்திட்டு வாழ்க்கை கடிந்து உம்கழலடிக்கே
உருகி மலர் கொடு வந்துமை யேத்துதும் நாம் அடியோம்"[4]

என்று தெரிவித்தருளுகின்றார். இவ்வழிபாட்டால் இறைவன், உலகியற் போகங்கள் மேற்செல்லும் வேட்கைகள் போந்து தம்மை அலைத்துவருத்தா வண்ணம் ஆண்டான் என்பார், "மூலத்தடம் மூழ்கிய போகங்களும் மற்றெவையும் எல்லாம், விலைத்து அலையாவண்ம்கொண்டு எமையாண்ட விரிசடையீர்" என்றும் வியந்தோதுவதைக் காணலாம்.

இவ்வாறு பல்வகையிலும் பத்திநெறியின் நலத்தைப் பல திருப்பதிகங்களால் தாம் எடுத்தோதினராதலால், அவற்றைப்பலரும் மேற்கொண்டு பொருளுறவுணர்ந்து பாடிப் பரவுதல் வேண்டுமெனப் பரிந்தோதுகின்றார். கற்றோர் விரித்தோதும் விரதங்களும் ஞானங்களும் ஆகிய எல்லாம் இப்பத்

(1) 116 : 1. (2) 116 : 2. (3) 116 : 6. (4) 116 : 8.

நிச்செயலுக்குரிய ஞானமேயாகும் என்பது ஞானவேட்கை யுடையாரை ஒருப்படுத்துகின்றது. "விடும் ஞானமும் வேண்டு நீரேல் விரதங்களால், வாடு ஞானமென்னவதும் எந்தைவனுஞ் சுழி, நாடி ஞானசம்பந்தன செந்தமிழ் கொண்டிசை, பாடும் ஞானம் வல்லார் அடிசேர்வது ஞானமே"[1] என்பது காண்மின். என்னுவதும் என்பதன் ஈற்றிலுள்ள உம்மை ஆக்கப் பொருளதாய், விரதங்களால் வாடும் ஞானம் என்னுவதாம் என்று பொருள் தருகிறது.

நன்னெறிகாட்டும் ஞானசம்பந்தத் திருப்பதிகங்களைப் பயின்றோதினால் வரும் பயனைக் காட்டுவதும் ஞானசம்பந்தர் மேற்கொண்டுரைக்கும் நன்னெறியாதலின், அதனைக்கூறி இக்கட்டுரையை முடித்துக்கொள்ளுகின்றோம்.

"சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனுதல்" மெய்கண்ட தேவர் காட்டும் மெய்ம்மொழியாகும்; "தன்னையடைந்தோர் வினைதீர்ப்பதன்றோ தலையாயவர் தம் கடனுவதுதான்"[2] என்று நாவரசரும், "தாமென்றும் மனம் தளராத் தகுதிய யராய் உலகத்துக், காமென்று சரண் புகுந்தார் தமைக் காக்கும் கருணையினுன்"[3] என்று ஞானசம்பந்தரும் கூறுவர். இவ்வாறு தன்னை யடைந்தாரை யருளும் தலைவனுன பரமன், அருளுந்திறமோ மிக வியப்பானது; தன்னை யடைந்தோர், தனைப் போலவே இன்பம்பெற அருளுகின்றுன் என்பாராய்ச். "சங்கரனுர் தம்மைப்போலத் தம்மடியார்க்கும் இன் பளிப்பவர்"[4] என்று கூறுகின்றுர். அவ்விறைவனே போக மும் யோகமும் ஒருங்குடையவன்; "நல்லூர்ப் பெருமணத் தான் நல்ல போகத்தான் யோகத்தையே புரிந்தான்"[5] என்பது காண்மின். இத்திருப்பதிகத்தைப் பயின்றோதிப் பரவுவோருர், போகமும் யோகமும் பெறுவர் என்பதற்கு "வெங்குருவில் வேதியன் விரும்புதமிழ் மாலைகள் வல்லார், சித்திர விமானமமர் செல்வ மலிகின்ற சிவலோக மருவி, அத்தகு குணத்தவர்களாகி யனுபோகமொடு யோகமு

(1) 138:11. (2) 1:4. (3) 176:2. (4) 238:2. (5) 384:7.

மவரதே"[1] என்று உரைத்தருளுகின்றார். திருப்பதிகப் பயிற்சியால் விளையும் அனுபோகம் சிவலோகானுபோகமாகிய சிவபோகமாகும் என்பதனால், சிவஞானம் இத்திருப் பதிகங்களால் விளையுமென்பது இனிது பெறப்படும்.

## முடிப்புரை.

இதுகாறும் திருஞானசம்பந்தப் பெருந்தகை வழங்கிய ஞானநெறிகள் இவையென்பது கண்டோம்; இவையே யன்றி, ஞானசம்பந்தர் பாடிய திருப்பதிகங்களில் மிகப் பல சமயவுண்மைகளும் இயற்கை நலங்களும் மலிந்து கிடக்கின்றன. இறைவழிபாட்டில் ஈடுபடுவோர்க்கே யன்றி, இலக்கிய வழிபாட்டில் ஈடுபட்டோர்க்கும் இப்பெருமான் வழங்கிய திருப்பாட்டுக்கள் சீரிய இன்ப நிலையங்களாதல் இனிது புலனாகும்.

இத்திருப்பதிகங்களால் விளக்கப்படும் இறைவன் இயல்பையும், அவன் எழுந்தருளும் திருப்பதிகளின் சிறப்பையும், ஆங்காங்கு இறைவனை வழிபடும் நன்மக்கள் இயல்பையும், அவர் செய்யும் வழிபாட்டின் மாண்பையும், ஞானசம்பந்தப்பெருமான் திருவாய்மலர்ந்தருளியதன் பயனாக, பிற்காலத்தே வாழ்ந்த அரசர்களும் செல்வர்களும் பிறரும் சைவத் திருப்பணியில் ஈடுபட்டுச் சைவத்தின் மாண்பினை நிலைபெறச் செய்யலுற்றனர். திருப்பதிகங்களைத் திருக்கோயில்களில் நாடோறும் ஓதுதல் வேண்டும் என நிவந்தங்கள் நிறுவிய வேந்தர் பலரைக் கல்வெட்டுக்கள் ஒளிக்காது கூறுகின்றன. சில பதிகங்கள் கற்களிற் பொறிக்கப்பட்டிருத்தலையும் அறிகின்றோமன்றோ!

"ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி" என்று கடவுளுண்மைதெளிவித்து, "ஆட்பாலவர்க் கருளும் வண்ண மும் ஆதிமாண்பும், கேட்பான் புகில் அளவில்லை கிளக்க

(1) 338:11.

வெண்டா, கோட்பாலனவும் விளையுங் குறுகாமை யெந்தை, தாட்பால் வணங்கித் தலைநின்றிவை கேட்க தக்கார்"[1] என்றதனால் வழிபாட்டுநெறியே முடிந்த முடிபான நன்னெறியென ஞானசம்பந்தர் நிலை நாட்டியது, இன்று பலர் சைவரென்றும், தமக்குரியது சைவசமய நெறியென்றும் நினைந்தும் பேசியும் இறைபணியில் ஈடுபட்டுய்தற்கு ஏதுவாயிற்றெனின் அது மிகையாகாது.

இனி, நம் தமிழ்மொழி இயலிசை நாடகமென முத்திறத்ததென்பது உலகறிந்த செய்தியாகும். இயல் ஒழிந்த இசை நாடகங்களையுணர்த்தும் பண்டைத்தமிழ் நூல்கள் பல இறந்தொழிந்தன என்பதும் யாவரும் அறிந்தது. சிலப்பதிகாரமும் திருமுறைகளும் இல்லையென்றால் தமிழர்க்கு இசைச்சுவையே தெரியாது என்று பேசக்கூடிய இசைவீரர்கள் நம்நாட்டிலேயே தோன்றி யிருப்பர். பண்டைத் தமிழிசையின் ஒருபகுதிக்குச் சீரிய இலக்கியமாக இத்திருப்பதிகங்கள் இலங்குகின்றன. இறைவன் வழிபாட்டு நெறியை வற்புறுத்தப் போந்த ஞானசம்பந்தப் பெருமான் தமது அருமைத் திருப்பதிகங்களை இசைப்பாட்டுக்களாகவே அமைத்தது ஒரு நன்னெறியாயிற்று. இவற்றிற்காணும் இசை நுட்பங்களை, திரு. விபுலாநந்த அடிகள் ஆராய்ந்து முடிபு செய்துள்ளார்கள். "அந்தணர் வேள்வியும் அருமறைத் துழனியும் செந்தமிழ்க் கீதமும் சீரினால் வளர்தர,"[2] என்றும், 'ஊறுபொருளின்தமிழியற் கிளவி தேரு மடமாதருடனே, வேறுதிசை யாடவர்கள் கூற இசை தேருநல் எழில் வேதவனமே"[3] என்றும் பிள்ளையார் ஓதுவது காண்மின். "ஊறு பொருள்.........வேதவனமே" என்ற பகுதியில் தமிழ் மொழியினாலமைந்த இசைப் பாட்டுக்களை இசைநலங் கனிய மகளிர்பாட, வேற்றுநாட்டு ஆடவர் அப்பாட்டிசையை அம்மகளிருடன் உடனிருந்து பாடி இசை நலம் தேர்ந்து இன்புறுகின்றனர் என்று ஞானசம்பந்தர் கூறுவதை நோக்கின், தமிழ்ப்பாட்டின் வாயிலாக இசைக் கலையை வளர்த்தல் வேண்டுமென்பது நன்கு புலனாகின்றது.

(1) 312:4. (2) 286:3. (3) 334:4.

ஞானசம்பந்தப்பெருமான் "செந்தமிழ்க்கீதம்" என்றும், "செய்ய தண் தமிழிசை" யென்றும், "எண்ணுமொரெழுத்து மிசையின் கிளவி தேர்வார் கண்ணு முதலாய கடவுள்"[1] என்றும் கூறிக் கொள்ளப்படும் எண்ணும் எழுத்தும்போல இசையும் ஒத்த மதிப்புடைய தென்றும், எண்ணெழுத்துக் களோடு இசையுங் கற்றற்குரிய தென்றும், இவற்றைக் கற்போர் வழிபடும் முதற் கடவுள் சிவபரம்பொரு ளென்றும் உயர்த்தோதி ஓள்ளிய தமிழிசையை வளர்ப்பது, உயர்ந்த செல்வத் துரவோர்க்கும் இறைவழிபாடு நயக்கும் யாவர்க்கும் கடன் என்பது குறித்தே யென வுணரவேண்டும். பிறர் எவ்வாறாயினும், தமிழ்ச்செல்வர்களும், ஆதீனங்களும், கோயி லார்களும் செந்தமிழால் இயன்ற இசையினைப் பேணிப் புரக்கும் கடமையுடையராவர்; திருஞானசம்பந்தர் செய் தருளிய இத்திருப்பணியை நாளும் மேற்கொள்வதால் சைவத்துக்கும் சைவத் தமிழ்க்கும் குறைவிலா நிறைவே எய்துமாதலின், இந்நெறியினை அவர்கள் மேற்கொண்டு தகுவன செய்வார்களாக. இக்காலம் கற்றவர் கல்லாதவர், செல்வமுடையவர், இல்லாதவர், முதியவர், இளையவர், ஆடவர் பெண்டிர் எல்லாரும் இசைமேல் பெருவேட்கை கொண்டிருக்கும் காலமாகும்; இவ்வேட்கை மக்களை வேறு வழிகளிற் செலுத்திக் கடவுட்கொள்கை நல்லொழுக்க முதலி யவற்றை நெகிழ்வித்துத் துன்பத்திலாழ்த்துமோ என்ற அச்சம் அறிஞர்கட்குத் தோன்றியிருக்கிறது இதை யுணர்ந்து அறவோரும் செல்வரும் ஒருமித்த நோக்கத்துடன் தமிழிசை வாயிலாக ஞானசம்பந்தப் பெருந்தகை முதலாயினோர் வற் புறுத்திய நன்னெறிகளைப் பரப்புவார்களாக. எதிர்கால உலகத்தின் செம்மைநிலை வேண்டிப் பல்வேறு முறைகளைக் காணுங்கால் சமயநெறி யொழுகும் சான்றோர் இதனைக் கருத்திருத்தி வேண்டுவன முயல்வார்களாக.

"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயி லுறையும் எம் ஆதியே"

---

(1) 107 : 1.

# சேரமான் பெருமாள் பிரபந்தங்கள்.

சேரமான்பெருமாள் அருளிய பிரபந்தங்களைப் பற்றிச் சில கூறுவதற்கு முன் அவர் வரலாற்றைப் பற்றிச் சிறிது கூறுவது முறையாகும். திருத்தொண்டர் புராணம் ஒரு பெரிய யாறு போல்வது. அவ்யாறு கயிலை மலையில் தோன்றி மண்ணிடையே பல நாயன்மார்களுடைய வரலாறுகளாகப் பிரிந்து சென்று சிவ பரம்பொருளின் திருவருட் கடலில் சென்று சேர்கிறது. இதன் தோற்றுவாய் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வரலாறாகும். இவ்வரலாறு திருமலையில் தோன்றித் தில்லைவாழந்தணர் புராணம் முதலாக வெள்ளானைச் சருக்க மீறாகப் பல ஆறுகளாகப் பிரிந்து சைவவுலகில் பாய்ந்து சைவப் பயிரை விளைவித்துச் சென்று திருவருட் கடலையடைவதைக் காண்கின்றோம். இவற்றுள் ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் என்ற இருவர் புராணங்களாகிய யாறுகள் பெரியனவாகும். இவை தம்முள் கூடியும் பிரிந்தும் செல்வதோடு வேறு சிலவற்றோடு கலந்து பின் பிரிந்து செல்கின்றன. சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வரலாறு மூலநதியாய்ப் படர்ந்து ஏயர் கோன் கலிக்காமர், சேரமான் பெருமாள் என்ற இருவர் வரலாறுகளுடன் கலந்து ஓடித் திருக்கயிலாயத்தையே அடைகிறது. கிழக்கே கடற்கரையில் தோன்றிய சுந்தரர் வரலாறாகிய யாறு, மேற்கே சேரநாட்டில் தோன்றிய சேரமான் பெருமாள் வரலாறாகிய யாறு கிழக்கே ஓடிவந்து திருவாரூரில் தன்னோடு கலக்கக் கலந்து பாண்டிநாடெல்லாம் பாய்ந்து, சோழ நாட்டிற்கே திரும்பிப் போந்து, மேற்கே சேர நாட்டிற்குச் சென்று, மீட்டும் திருவாரூருக்கு வந்து, பின்னரும் அம்மேலைநாட்டிற்கே சென்று, சிவனருட் கடலில் கலந்து ஒன்றுபடுகிறது. இவ்யாறுகளின் வரவும், இவை கொணரும் வளங்களும் நம் தமிழ்நாட்டிற்கு வழங்கிய நலத்திற்கும் அதனால் சைவ மக்கள் பெற்றுள்ள மேம்பாட்டிற்கும் அளவு காண்பது முடியாத செயலாகும்.

சேரமான் பெருமாள் இற்றைக்குச் சுமார் ஆயிரத்து நூறு ஆண்டுகட்குமுன் நம் நாட்டில் இருந்து ஆட்சிபுரிந்த அரசர் பெருந்தகையாகும். இவர் பெயர் பெருமாக் கோதை யென்பது. சிவ வழிபாட்டில் இவர் இளமை முதலே ஊன்றிய உறுதி படைத்தவர்; செங்கோற் பொறையன் என்னும் சேர வேந்தனுக்குப் பின் சேர நாட்டிற்கு முடியுடை மன்னரானவர்; சிவபெருமான் அன்பராகிய பாணபத்திரர் பொருட்டுத் திருமுகம் விடுக்கப்பெற்றவர்; சிவபெருமான் திருவருள் காட்டத் திருவாரூரையடைந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளைக் கண்டு அவரோடு பிரியா நட்புற்றவர். இவர், சுந்தரமூர்த்திகளைத் தம் சேரநாட்டிற்கு அழைத்துச் சென்று பல நாள் தம்மோடு இருத்தி அவர்க்குப் பணிசெய்யும் பேறு பெற்றவர்; மறுபடியும் சுந்தரமூர்த்திகள் தாமே தம் நாட்டிற்கு வந்து பரமன் விடுத்த வெள்ளானைமீது கயிலைக்குச் செல்வதுணர்ந்து, அவர் யானைக்கு முன் தம் குதிரைமீதேறிக் காவல்புரிந்து செல்லும் கழிநலம் பெற்றவர்; கயிலையை யடைந்து சிவபெருமான் திருமுன் தாம் பாடிச் சென்ற திருவுலாப் புறத்தை அரங்கேற்றிச் சிவகணங்கட்குத் தலைவராம் செம்மை நிலை எய்தியவராவர்.

இனி, இவர் பாடியருளிய பிரபந்தங்கள் மூன்றாகும். அவை பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக் கோவை, திருக்கயிலாய ஞானவுலா என்பன. இவற்றுள் பொன்வண்ணத் தந்தாதி, தில்லையில் பாடி நடராசப் பெருமான் திருப்படிக்கீழ் அரங்கேற்றம் செய்யப்பெற்றது; திருவாரூர் மும்மணிக்கோவை திருவாரூரில் சுந்தரமூர்த்திகள் கேட்க அரங்கேற்றம் செய்யப்பெற்றது; திருக்கயிலாய ஞானவுலா திருக்கயிலாயத்தே சிவபரம்பொருளின் திருமுன் அரங்கேற்றம் செய்யப்பெற்றது. இவற்றின் நலம் காண்பதற்கு முன், நாம் இவற்றைச் செய்த ஆசிரியராகிய சேரமான் பெருமாளின் மனப்பான்மையைத் தெரிந்துகொள்வது நலமாகும். சான்றோர் செய்த நூல் நலம் காணப்புகுவோர் முதற்கண்

அந்நூலைச் செய்த அச் சான்றோர் மனப்பான்மையைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று பெரியோர் கூறுவர்.

நூலாசிரியன் மனப்பான்மையை யுணர்தற்கு இருவகைக் கருவிகள் உண்டு. அவை அகக்கருவி, புறக்கருவி என்பன. அகக் கருவி அவர் செய்த நூலும் புறக்கருவி அவர் வரலாறுமாகும். நம் நாட்டுச் சான்றோர்களுள் பலருடைய மனக்கோளை யறிதற்குப் புறக்கருவி போதிய அளவு கிடைப்பதில்லை. அகக்கருவியே பெரும்பாலும் கிடைப்பது. அதனால், நாம் அச் சான்றோர்களின் மனப்பான்மைகளுள் ஒரு பகுதியே காண முடிகிறது. மிகச்சிலர்க்கே இரு கருவிகளும் அமைந்திருக்கின்றன. அச் சிலருள் நம் சேரமான் பெருமாளது அநட்கருத்தை இருவகைக் கருவிகளையும் கொண்டு காண்பது இயல்கிறது.

புறக்கருவியாகிய இவரது வரலாறு தெய்வக் கவிநலம் சிறந்த சான்றோரால் செப்பமாக நமக்கு வழங்கப்பட்டுள்ளது. சேக்கிழார் பெருமான் இவர் வரலாற்றைக் கழறிற்றறிவார் புராணம், வெள்ளானைச் சருக்கம் என்ற இரண்டு பகுதிகளில் தெய்வமணக்கும் செய்யுட்களால் தீவிதாகச் செப்பியிருக்கின்றார். அச்செய்யுட்கள் நம் கருத்தை மிக விரைவில் ஈர்த்துக்கொள்ளும் சிறப்புவாய்ந்தவை யாதலின், நாம் மிக்க விழிப்போடு சென்று அவற்றின் வாயிலாகச் சேரமான் பெருமாளின் திருவுள்ளக் கிடையைத் தேர்ந்துகொள்ளவேண்டும். இன்றேல், அத் தெய்வக் கவிகளின் தீஞ்சுவை நம் கருத்தை விழுங்கிக்கொள்ளும். சேரமான் பெருமாள் அரசராதற்கு முன் திருவஞ்சைக்களத்தில் சிவபரம் பொருட்குத் தொண்டுபுரியும் திருப்பணியில் ஈடுபட்டிருக்கின்றார். அக்காலத்தே அவர் உலகியல்பும் அரசியல்பும் ஆராய்ந்து தெளிந்து சிவத்தொண்டிலேயே உறைத்து நிற்கின்றார். இதனைச் சேக்கிழார் பெருமான், “உலகின் இயல்பும் அரசியல்பும் உறுதியல்ல என வுணர்வார்” என்று கூறுகின்றார். இவ்வுணர்வு நெஞ்சிலேயே நின்றொழியாது

செயலின்கண்ணும் உருக்கொண்டு விளங்குகின்றது. நாடோறும் இவர், "புலரியெழுந்து புனல் மூழ்கிப் புனித வெண்ணீற்றினும் மூழ்கி,[1]" "திருப்பாட்டும் ஒருமை நெறியின் உணர்வுவர ஓதிப் பணிந்து" ஒழுகுவது இக்கருத்தை வற்புறுத்துகின்றது. மேலும், இவர், செங்கோற் பொறையன் இறந்ததும் அரசுரிமை யெய்தியபோது, அமைச்சர் வந்து அரசேற்க வேண்டுங்கால், அரசின்மேல் விருப்பம்வையாது, "இன்பம் பெருகும் திருத்தொண்டிற்கு இடையூறாக இவர் மொழிந்தார்" என்று நினைந்து நிற்கின்றார். அமைச்சர் அரசு முறை சிவ வழிபாட்டிற்கு இடையூறாகாது என்று பலபடியாகக்கூறக் கேட்டு, "அன்பு நிலை வழுவாமை அரசு புரக்கும் அருள் உண்டேல்",[2] இறைவனை இடைபெற்றறிவேன் என்று சொல்லி ஆண்டவனை வேண்டி யாரும் யாவும் கழறுவன அறியும் அறிவுவன்மைபெற்றுக் கழறிற் றறிவாரானது இவருடைய திருத்தொண்டின் உறைப்பை நன்கு வற்புறுத்துவதைக் காண்கின்றோம். இவ்வாறு இறைவன் திருவருட் குறிப்பால் அரசு முறை ஏற்கும் இவரது மனப்பண்பு, சிவநெறிக்கண் ஊன்றி நிற்கும் ஒப்புயர்வற்ற மெய்யுணர்வினை நமக்குக் காட்டுகிறது. இவரும் பின்பு தாம் பாடிய பொன்வண்ணத் தந்தாதியில், "தனக்குன்றம் மாவையம் சங்கரன்தன் அருள் அன்றிப் பெற்றால், மனக்கென்றும் நெஞ்சிற் கடையா நினைவன்"[3] என்றும், "நானிலம் ஆளினும், நான்மறைசேர் மையார் மிடற்றான் அடிமறவா வரம் வேண்டுவனே" என்றும் தம் மனக்கோளை விளங்க வுரைக்கின்றார்.

இவர் அரசேற்று உலா வரும்போது உடல் முழுதும் உவர் மண்ணூறி வெண்ணீறு சண்ணித்தாற்போல் ஒரு வண்ணான் தோன்றக்கண்டு "உறையிற் பொலிந்த திருக்கரத்தார் அடியார் வேடம்"[4] என்று நினைந்து அவனுடைய காலில்

(1) பெரிய பு. கழறிற் 8. (2) பெரிய பு. கழறி. 13.
(3) பொன். அந். 43. (4) பெரிய பு. கழறி. 18.

வீழ்ந்து வணங்குவதும், அவன் மன மருண்டு, "அடியேன் அடிவண்ணான் என்று அஞ்சி நடுங்கி நின்றபோது "அடியேன் அடிச்சேரன்" என்று மொழிந்து "திருநீற்று வார வேடம் நினைப்பித்தீர்" என்று அவனை இனிது செல்ல விடுப்பதும், இவர்க்குச் சிவபரம்பொருளின் மேல் இருந்த உண்மையன்பினை, அடியார் வழிபாட்டால் தெரிய விளக்குகின்றன. திருநீற்று வார வேடத்தில் இவர்க்கு இருக்கும் பேரன்பினை, அத்திருவந்தாதியில்,

"வருகின்ற மூப்பொடு நீப்பிணிக் கூற்றம்
வைகற்கு வைகல்:
பொருகின்ற போர்க்கொன்றும் ஆற்றகில்லேன்;
வந்துன் பொடிபூசி
அருகொன்றி நிற்க அருளுநகண்டாய்
அழல்வாய் அரவம்
வெருகொன்ற வெண்மதி செஞ்சடை
மேல்வைத்த வேதியனே"[1]

என்று குறிக்கின்றார்.

இவர் அரசு கட்டிலேறி அரசுபுரிந்து வருங்கால், இவர் மனம் சிவ வழிபாட்டில் சிறிதும் திரியவே இல்லை; தம் மனம், சொல், செய்கை என்ற மூன்றையும் சிவ வழிபாட்டில் ஒன்றுவித்து, நாளும் சிவபெருமான் திருவடிச் சிலம்போசை தமது சிவபூசைக்கண் தம் திருச்செவியாரக் கேட்டுச் சிறந்து வருகின்றார்; இவர் எண்ணமெல்லாம் சிவபெருமான் திருவடியிலேயே ஒன்றி நிற்கின்றன. இவற்றைச் சேக்கிழார் பெருமான், நன்கு கண்டு, நம் சேரமானுடைய அறிவு முற்றும், "நீடும் உரிமைப் பேரரசால் நிகழும் பயனும் நிறைதவமும், தேடும் பொருளும் பெருந்துணையும் தில்லைத் திருச்சிற்றம்பலத்துள், ஆடுங் கழலே எனத் தெளிந்த அறிவு"[2] என்றே அறிவிக்கின்றார். நம் சேரமானும் தம் திருவந்தாதியில், இதுவே தம் கருத்து என்பாராய்,

(1) பொன் அந். 21. (2) பெரிய பு. கழறிற். 23.

"நெஞ்சமே எரியாடி எம்மான், கடல் தாயின நஞ்சம் உண்ட பிரான் கழல் சேர்தல் கண்டாய், உடல்தான் உள பயனாவ சொன்னேன் இவ்வுலகினுள்ளே"[1] என்றும், "முனியே முருகலர் கொன்றையினாய், என்னை மூப்பொழித்த கனியே, கழலடியல்லால் களைகண் மற்றொன்றும் இல்லேன்"[2] என்றும் கூறுகின்றார். இவ்வண்ணமே, நம்பியாரூரரை நினைப்பிக்கும் கருத்தால், பரமன் தன் திருவடிச் சிலம்போசையை ஒருநாள் இவர்க்குக் காட்டத் தாழ்த்தபோது, இவர், "அடியேன் என்னோ பிழைத்தது" என்று உரைப்பவர், "ஆசையுடம்பால் மற்றினி வேறு அடையும் இன்பம் யாது"[3] என்று கூறுகின்றார்.

சிவ வழிபாடு புரியும் தமக்குச் செங்கோலரசு தந்து, திருவடிச் சிலம்போசை காட்டிப் பரமன் அருள் செய்வது தம் திருத்தொண்டில் வழாநிறுத்தற்கே என்ற கருத்து இவர் கருத்தில் நிலவிய வண்ணம் இருக்கிறது. பாணபத்திரர் திருமுகப் பாசுரம் பெற்றுவந்து காட்டக் கண்டு அளவிலா இன்பத்தில் திளைத்த இவர் தம் அரசியற் பண்டாரத்தைத் தந்து, அரசுரிமையினையும் உடன் தருகின்றார். பாணபத்திரர் அமைதிகூர்ந்து, "அரசே, அரசு கோடற்கு ஆணையில்லை" என்று உரைக்கின்றார். இவர் உடனே, தாம் அரசேற்றது பரமன் திருவருட் குறிப்புக் கொண்டேயாதலின், அதனை ஈவதும் அக்குறிப்பினாலன்றிக் கூடாதே; தாம் செய்தது தவறாயிற்றே என்று நினைந்து அஞ்சி அடங்குவார், "இறைவராணை மறுப்பதற்கு அஞ்சி யிசைந்தார்"[4] என்று சேக்கிழார் பெருமான் தெரிவிக்கின்றார். இச் செயலால் சேரமான் கருத்தில் ஒரு நல்லுணர்வு பிறந்தமை புலனாகிறது. தன்னை நினைந்து வழிபடுவார்க்கு ஆண்டவன் வேண்டுவனவற்றைத் தந்தும் உணர்த்தியும் வழுவாவாறு திருத்திப் பணிகொள்கின்றான் என்பதைத் தெளிகின்றார். "அரசு ஆணையில்லை,"

(1) பொன். அந். 13. (2) பொன். அந். 40. (3) பெரிய பு. கழறிற். 42. (4) பெரிய பு. கழறிற். 37.

என்று பாணபத்திரர் விடை, "உமக்கு அரசு நல்கிய இறைவன் அதனை நெகிழ்த்துப் பிறர்க்குக் கொடுத்துவிட ஆணையிடவில்லை" என்று இவரைத் தெருட்டுகிறது. இவர் தெளிந்து அமைகின்றார். இதனைக் குறிப்பாக இவர் தம் திருவந்தாதியில், "தாமே அருள் செய்து கொள்வர் தம் பல்பணியே"[1] என்றும்," தாழ்சடையான் வஞ்சம் கடிந்து திருத்திவைத்தான் பெருவானகமே"[2] என்றும், "புண்ணிய மூலத்தெம்மான், திருந்தியபோது அவன்தானே களையும் நம் தீவினையே"[3] என்றும் இயம்புகின்றார்.

இனி, வண்ணான் தோற்றத்தைக் கண்டு அடியார் வேடம் எனக் கருதியதில் இருந்தே இவர்க்கு அடியார்பால் இருந்த அன்பின் மிகுதி நன்கு தெரிகிறது; ஆயினும் நம்பி யாரூரர் பொருட்டுப் பரமன் சிலம்போசை தாழ்த்தது தெரிந்ததும், பரமன் அடியவர்பால் கொள்ளும் அன்பின் திறம் பெரிதும் விளங்கிவிடுகிறது. அப்போது இவர், நம்பியாரூரரைத் தாமும் கண்டு பணியவேண்டுமென்று வேட்கை கொள்கின்றார். அக் காலத்தே இவர் பரமனைப் பற்றி நினைக்கும்போது, "என்னே அடியார்க்கு இவர் அருளும் கருணை யிருந்தவாறு" என்று வியப்புண்டாகிறது. அதனால் அடியார் இணக்கம் தமக்குப் பேரின்பம் தரும் என்பது தெளிவாகிறது. அது குறித்துத் திருவாரூர் நோக்கி வருபவர் தில்லையம்பதி வந்து, சிவபரம்பொருளைக் கண்டு பேரின்பெய்துகின்றார். அங்கே தங்கியிருக்கையில் தமது நினைவு செயல் சொல் முழுதும் சிவ பெருமானிடத்தே ஒன்றி நிற்பது உணர்ந்து பொன்வண்ணத்தந்தாதியைப் பாடி அரங்கேற்றுகின்றார். அதன்கண் தம் கருவி கரணங்கள் சிவமயமாதலை உணர்ந்து, எடுத்த எடுப்பிலேயே, "தன்னைக்கண்ட என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்

1) பொன். அந். 9. (2) பொன். அந். 11. (3) பொன். அந் 17.

ஆகிய ஈசனுக்கு, பொன் வண்ணம் எவ்வண்ணம் அவ் வண்ணம் மேனி பொலிந்திலங்கும்"[1] என்று புகலுகின்றார். மேலும், தாம் நம்பியாரூரர் என்னும் பெருந் தொண்டரைக் காண வந்திருக்கும் நினைவு நூல் முடிவில் எழ, அவர் காட்சி தமக்குச் சிவபோகத்தைத் தரும் என்று இவர் துணிகின்றார். அத் துணிவை,

"மாயன்நன் மாமணி கண்டன் வளர்சடை
யாற்கடிமை
ஆயின தொண்டர் துறக்கம் பெறுவது
சொல்லுடைத்தே;
காய்சின யானை வளரும் கனக
மலையருகே
போயின காக்கையு மன்றே படைத்தகப்
பொன் வண்ணமே"[2]

என்று வெளிப்படுத்துகின்றார்.

இவ்வந்தாதியின்கண் இவர், தாம் இவ்வந்தாதியைப் பாடிய காரணம் தம் கருவி கரணங்களைச் சிவத்தொண்டில் ஈடுபடுத்துதல், உடல் வாழ்வின் உயர்வின்மை, தொண்டு செய்யும் முறை, தொண்டினை யேற்கும் பரமனுடைய அருமை நிலை, அம்மையப்பனுய் எழுந்தருளும் திறம், அட்ட மூர்த்தியாய் அமைதல், அகப்பொருட்டுறைகள், இங்கிதப் பாட்டுக்கள், இனிய சொல்லாடல்கள், இனிய காட்சிகள் எனப் பல பொருள்கள் பொதிந்து கிடக்கின்றன. அவற்றின் நலம் காண்டற்கு முயல்வோமாயின், இச் சொற்பொழிவு மிக நீட்டிக்குமாதலின், வகைக்கொன்று காட்டி மேற்செல் கின்றேன்.

இவ்வந்தாதி பாடிய காரணத்தை இவர், ஏனையோர் போல நூலின் தொடக்கத்திலோ முடிவிலோ கூறாது இருபது பாட்டுகள் பாடிய பின்பு கூறலுறுகின்றார். முதற்கண் நமக்குக் கவிபாடும் வன்மையில்லையென்றும், பிறர் உரைத்த

(1) பொன். அந். 1. (2) பொன். அந். 100.

வற்றை யுரைப்பின் அறிஞர் ஏலார் என்றும், தாம் சொல்லுவன புன் சொற்களே என்றும், அவற்றை ஏற்றல் வேண்டும் என்றும் உரைப்பார்,

"தெள்ளிய மாந்தரைச் சேர்ந்திலன் திங்களி
பாடலுற்றேன்,
ஒள்ளிய சொல்லும் பொருளும் பெறேன்;
உரைத்தாருரைத்த
கள்ளிய புக்கால் கவிகள் ஒட்டார்; கடல்
நஞ்சயின்றாய்;
கொள்ளிய அல்ல கண்டாய் புன்சொ லாயினும்
கொண்டருளே"[1]

என்கின்றார். இத்துணைக் குறைபாடு கூறிக்கொள்வோர் பாடாதொழியலாமே என எழும் வினாவிற்கு விடை கூறுவார் போல, "அமரர் குழாம் நின்னைப் பொருள் மொழிகளால் போற்றிப் பரவக்கண்டேன்; அக்காட்சி என்னையும் பாடுமாறு ஊக்க அடியேனும் பாடலுற்றேன்; மதி தோன்றி நிலவு பொழியுமிடத்து மின்மினியும் ஒளிவிரிகிறதன்றோ" என்பார்,

"அருளால் வருநெஞ்சம் உண்டுநின் றனை
அமரர்குழாப்
பொருளார் கவிசொல்ல யானும்புன் சொற்களைப்
புணர்க்கலுற்றேன்;
இருள்ஆ சறஎழில் மாமதி தோன்றவும்
என்றதென்ன
வெருளா தெகிர்சென்று மின்மினி தானும்
விரிகின்றதே"[2]

என்று விளம்புகின்றார். இவ்வாறு பாடிச்செல்பவர் எண்பது பாட்டுக்கட்குமேல் பாடிவிடுகின்றார். மேலே பாடுமிடத்துச் சிறிது சோர்வு தோன்றுகிறது. அப்போது, அவர்,

(1) பொன். அந். 100. (2) பொன். அந். 25.

“மானிலத் தோர்கட்குத் தேவ ரனையஅத்
தேவரெலாம்
ஆனலத் தால்தொழும் அஞ்சடை யீச
னவன்பெருமை
தேனலர்த் தாமரை யோன்திரு மாலவர்
தேர்ந்துணரார்;
பாநலத் தால்கவி யாம்எங்ஙனே
இனிப் பாடுவதே”[1]

என்று பாடுகின்றார்.

அவர் தம் கருவி கரணங்களைத் தொண்டில் ஈடுபடுத்தும் திறம் நம்மனோரை அத் தொண்டில் ஈடுபடச் செய்யும் அறவுரையாக இருக்கிறது.

“கூறுமின் ஈசனைச் செய்ம்மின்குற் றேவல்
குளிர்மின்கண்கள்
தேறுமின் சித்தம் தெளிமின் சிவனைச்
செறுமின் செற்றம்
ஆறுமின் வேட்கை யறுமின் அவலம்
இவைநெறியா
ஏறுமின் வானத் திருமின் விருந்தா
இமையவர்க்கே”[2]

என்று இசைக்கின்றார்.

உடல் வாழ்வின் உயர்வின்மையைப் பலவகையால் தெளிவிக்கின்றார்.

இவ்வகையில் ஏனைப் பெரியோர்களைப்போலத்தான் இவரும் பல பாட்டுக்களில் விரித்தோதுகின்றார். உடல் வாழ்வு நீடித்ததன்று; பலவகையாலும் தேய்ந்து தேய்ந்து இறுவது என்பார்,

---

(1) பொன். அந். 89 (2) பொன். அந். 70

"வேண்டிய நாட்களிற் பாதியும் கங்குல்
மிகஅவற்றுள்,
ஈண்டிய வெங்நோய் முதலது பிள்ளைமை
மேலதுமூப்பு
ஆண்டின அச்சம் வெகுளி அவாஅழுக்
காறு இங்ஙனே
மாண்டன; சேர்தும் வளர்புன் சடை
முக்கண் மாயனையே"[1]

என்று கூறுகின்றார். ஏனையோர், 'வேத நூற் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவ ரேனும்"[2] என வயதெல்லையை நூறாகக் கூற, இவர், அதனைக் குறியாது, "வேண்டிய நாட்கள்" என்று உரைப்பது இவரது உலகியலுணர்வு மிகுதியை விளங்கக் காட்டுகிறது.

இனி, உடல் வாழ்வின் புன்மை உணர்ந்த வழி ஒருவர்க்கு இறைவன் திருவருளில் ஒன்றி நிற்கும் பெருவாழ்வின்கண் ஆர்வமுண்டாவது இயற்கையே. அதனைப் பெறுதற்கு இறைவனை வழிபடுவதன்றிப் பிறிதில்லை. அவ்வழிபாட்டின் திறம் கூறலுற்ற நம் சேரமான் பெருமாள்,

"பணிபதம்; பாடிசை; ஆடிசை யாக;
பனிமலரால்
அணி; பதங்கள் பற்கொள் அப்பனை; அத்தவற்
கே அடிமை
துணி; பதம் காமுறு; தோலொடு நீறுஉடல்
தூர்த்துநல்ல
தணிபதம் காட்டிடும்; சஞ்சல நீஎன்
தனிநெஞ்சமே"[3]

என்றும், தொழுதல், பணிதல், நினைதல், அருச்சித்தல் முதலியவற்றின் நலம் கூறுதலுற்று,

---

(1) பொன். அந்: 99. (2) திவ்ய பிரபந். திருமாலை 3.
(3) பொன். அந். 14.

" உலகா ளுறுவீர் தொழுமின்; விண்ணாள்வீர்
    பணிமின் நித்தம்;
பலகா முறுவீர் நினைமின்; பரமனொடு
    ஒன்றலுற்றீர்
நலகா மலரால் அருச்சிமின்; நாள்நர
    கத்துநிற்கும்
அலகா முறுவீர் அரனடி யாரை
    அலைமின்களே "[1]

என்றும் விரியக் கூறுகின்றார். இந்நெறிக்கண் இவர் கூறுவன பலவாதலின் இம்மட்டில் அமைகின்றோம்.

இவ்வாறு நாம் தொண்டுபுரிந்தவழி அதனை யேற்று நிற்கும் பரமனுடைய அருமையை இனிது ஓதுகின்றார். அடியார் ஏத்துவதைப் பரமன் மிக விரும்புபவன் என்பதை, "ஏத்துக் கொலாம் இவர் ஆதரிக்கின்றது"[2] என்று கூறுவதை நோக்கப் பரமன் மிக எளியன் என்று நாம் கருதலாம். ஆனால், அதனை மாற்றி அப்பரமன் மிக அரியவர்; அவர் தம்மை நினைப்பவர் நெஞ்சினும் கண்ணினும் நிலவுகின்றார்; ஆயினும் அவர் தன்மை நம்மனோர்க்கு உணர்வரிது என்பாராய் "திரிதவர் கண்ணுள்ளும் உள்ளத்தினுள்ளும் திரிதரினும், அரிதவர் தன்மை அறிவிப்பது"[3] என்று அறிவிக்கின்றார். மேலும் அவ்வருமைப் பாட்டிற்குச் சான்று கூறுவார். அப்பரமன் அட்ட மூர்த்தியாய் நிற்பவர் என்று அருளுகின்றார். "அலையார் புனல் அனல் ஞாயிறு அவனி மதியம் விண்கால், தொலையா உயிருடம்பு ஆகிய சோதி"[4] என்றும், 'பாதம் புவனி சுடர் நயனம் பவனம் உயிர்ப்பு, ஓங்கு ஓதம் உடுக்கை உயர்வான் முடி விசும்பே உடம்பு, வேதம் முகம் திசை தோள்மிகு பன்மொழி கீதம்"[5] என்றும், இவரது இந்நிலையை யுணர்ந்து பரவுபவர் சிவலோகம் பெறுவர் என்று கூறலுற்று, "தவனே உலகுக்குத் தானே முதல் தான்

(1) பொன். அந். 10. (2) ௸ 7. (3) ௸ 9.
(4) ௸ 15. (5) ௸ 19.

படைத்த எல்லாம், சிவனே முழுதும் என்பார் சிவலோகம் பெறுவர்"[1] என்றும் உரைக்கின்றார்.

இப் பரமனே மும்மூர்த்திகளாயும் அம்மையப்பனாயும் விளங்குகின்றார் என்பதை,

"வலந்தான் கழல்இடம் பாடகம்; பாம்பு
வலம்இடமே
கலந்தான்; வலம்நீறு இடம்சாந்து; எரிவலம்
பந்து இடம்; என்பு
அலந்தார் வலம்இடம் ஆடகம்; வேல்வலம்
ஆழியிடம்;
சலம்தாழ் சடைவலம் தண்ணங் குடில்இடம்
சங்கரற்கே"[2]

என்று கூறியருளுகின்றார். பிற நலங்களைப் பின்னர்க் காண்குதும்.

இனி இப்பரமன் அடியார்க்கு அருளும் திறத்தை, "உற்றடியார் உலகாள ஓர் ஊனும் உறக்குமின்றிப் பெற்றமதாவதொன் றேறும் பிரான்"[3] என்றும், "கள்ளவளாகம் கடிந்து அடிமைப்படக் கற்றவர்தம் உள்ளவளாகத் துறுகின்ற உத்தமன்"[4] என்றும்,

"சந்தித்த கூற்றுக்குக் கூற்றும் பிணிக்குத்
தணிமருந்தாம்
சிந்திக்கிற் சிந்தா மணியாகித் தித்தித்
தமுதமுமாம்
வந்திக்கில் வந்தென்னை மால்செய்யும் வானோர்
வணங்கநின்ற
அந்திக்கண் ணாடியினன் அடியார்களுக்
காவனவே"[5]

என்றும் எடுத்தோதுகின்றார்,

(1) என்பார்—என்று நினைந்து வழிபடுபவர். பொன். அந். 5.
(2) ஷை 65. (3) ஷை 34. (4) ஷை 78.
(5) ஷை 83.

இவ்வியல்பினதாதலின், இப்பரமன்பால் பகைப்பொருள் அனைத்தும் பகை நீங்கி ஒன்றி நின்று நிலவுவதொன்றோ அவனது பரமாந்தன்மையை உணர்த்துகின்றதென்பாராய்,

"ஆர்க்கின்ற நீரும் அனலும், மதியுமை
வாயரவும்
ஓர்க்கின்ற யோகும் உமையும், உருவும்
அருவும், வென்றி
பார்க்கின்ற வேங்கையும் மானும், பகலும்
இரவுமெல்லாம்
கார்க்கொன்றை மாலையினார்க்கு உடனாகிக்
கலந்தனவே"[1]

என்று கூறுகின்றார். அவனது வடிவத்தே உலகு முழுதும் ஒன்றி நிற்கிறதென்றற்கு,

"இருளார் மிடற்றால், இராப்பகல் தன்னால்,
இரைமறையால்
பொருளால் கமழ்கொன்றை யால்முல்லை புற்றர
வாடுதலால்
தெருளார் மதிவிசும்பால் பௌவம் தெண்புனல்
தாங்குதலால்
அருளால் பலபல வண்ணமு மாஅரன்
ஆயினனே"[2]

என்று இசைத்தருளுகின்றார். இவ்வியல்பால், "ஈசனொடாயினும் ஆசையறுமின்"[3] என்ற கொள்கை மிக்க துறவிகளும் இவர்பால் தீரா வேட்கையராகின்றனர் என்பார் "தொடங்கிய வாழ்க்கையை வாளா துறப்பர் துறந்தவரே, அடங்கிய வேட்கை அரன்பால் இலர்"[4] என்று அறிவிக்கின்றார்.

இவ்வகைக் கருத்துக்கள் நிரம்பிய இப் பொன்வண்ணத்தந்தாதியைத் தில்லையில் அரங்கேற்றி உள்ளார் சிறந்த இவர்,

(1) பொன். அந். 50. (2) ஷை 57. (3) திருமந். 2615.
(4) ஷை 64.

திருவாரூர் சென்று நம்பியாரூரரைக் கண்டு அவர் நட்புற்று உள்ளம் சிறக்கின்றார்.

சேரமான் திருவாரூரையடைந்து நம்பியாரூரரைக் கண்ட போது, ஆராக்காதலுற்று அவர் அடித்தாமரையில் முதற்கண் வீழ்ந்து வணங்குகின்றார். இதனைச் சேக்கிழார் பெருமான் "சந்த விரைத்தார் வன்றொண்டர் முன்பு விருப்பினுடன் தாழ்ந்தார்"[1] என்றார், "முன்பு பணிந்த பெருமானைத் தாமும் பணிந்து"[2] வரவேற்றனர் என்றும் கூறுகின்றார். இவர் இருவர்க்கும் உண்டான நட்பின் நலத்தைச் சேக்கிழார் பெருமான் நிரம்ப எடுத்து இயம்புகின்றார். இருவரும் ஒருவரையொருவர் பணிந்து தழுவிக்கொள்ளும் செயலை,

"முன்புபணிந்த பெருமானைத் தாமும்
பணிந்து முகந்தெடுத்தே
அன்புபெருகத் தழுவவிரைந்து அவரும்
ஆர்வத் தொடுதழுவ
இன்பவெள்ளத் திடைநின்றும் ஏற
மாட்டா தலைவார்போல்
என்பும்உருக உயிரொன்றி உடம்பு
மொன்றும் எனஇசைந்தார்"[2]

என்றும், "ஒருவர் ஒருவரிற் கலந்த உணர்வால் இன்ப மொழியுரைத்து"[3] மகிழ்ந்தார் என்றும் கூறுகின்றார். இவ்வாறே பின்பு நம்பியாரூரர் இறுதியில் சேரநாட்டிற்குச் சென்று சேரமானைக் கண்டபோதும், இருவரும் பணிந்த செயலை, "சேரர் பெருமான் எதிர்சென்று, தலைநாட்கமலப் போதனைய சரணம் பணியத் தாவில் பல, கலைநாட்டமுத ஆரூரர் தாமும் தொழுது கலந்தனரால்"[4] என்றும், "சிந்தை மகிழும் சேரலனார் திருவாரூரர் எனு மிவர்கள் தந்த மணி மேனிகள் வேறாம் எனினும் ஒன்றும் தன்மையராய், முந்த

---

(1) பெரியபு. கழறிற் 64. (2) ௸ 65. (3) ௸ 67.
(4) பெரியபு. வெள்ளா 19.

எழுங் காதலின் தொழுது"[1] தழுவிக்கொண்டனரென்றும், "ஒருவர் ஒருவரிற் கலந்து குறைபாடின்றி உயர் காதல் இருவர்"[2] என்றும் உரைக்கின்றார்.

இவ்வாறு நம்பியாரூரருடன் உயர் காதல் நண்பராகிய சேரமான் அவருடன் திருவாரூர்ப் பரமனைக் கண்டு பணிந்து வழிபட்டு அவர்பேரில் தாம் பாடிய திரு மும்மணிக் கோவையை, அந்நம்பியார் இனிது கேட்க அரங்கேற்றம் செய்கின்றார். அக்காலத்தே அதன் நன்மை இனிது விளங்க நம்பியாரூரரை அரசர் கேட்பித்தார் என்று கூறும் சேக்கிழார், "திரு மும்மணிக்கோவை நாவலூரர் தம்முன்பு நன்மை விளங்கக் கேட்பித்தார்"[3] என்றே கூறுகின்றார்.

இப்போது, நாம், இத் திரு மும்மணிக்கோவையின் நலம் சிறிது காணலாம். இதன்கண் முப்பது திருப்பாட்டுக்கள் உண்டு. இவை யாவும் அகப்பொருள் துறையிலேயே அமைந்திருக்கின்றன. திருவந்தாதியிலும் ஐம்பது பாட்டுக்கள் இவ்வகத்துறையே பொருளாகக் கொண்டுள்ளன. இவ்வகத் துறையில், அகனைந்திணைக்குரியன சிலவும், கடவுள் மாட்டு மானிடப்பெண்டிர் நயந்த பக்கத்தன பலவுமாகும். திருவந்தாதியில் வருவன பலவும் அகனைந்திணையல்லாதனவை யாதலின், அவற்றை முதற்கண் சிறிது காண்போம்.

ஒருத்தி சிவபெருமானைக் கண்டு அவன்பால் கருத்திழந்து, உடல் மெலிந்து வளைசோர்ந்து வருந்துகின்றாள். அவள் தோழி போந்து 'நீ இவ்வாறு வளையும் கலையும் இழந்து நிற்பதால் பிறர் இகழும் பழியுண்டாகும்; நம் பெண்மைக்குரிய சிறப்பும் போம்" என்ற கருத்துப்பட,

"பாதம் புவனி, சுடர்நயனம், பவனம் உயிர்ப்பு, ஓங்கு
ஓதம் உடுக்கை, உயர்வான் முடி, விசும்பே உடம்பு,
வேதம் முகம், திசை தோள், மிகு பன்மொழி கீதம், என்ன
போதம் இவற்கோ மணிநிறம் தோற்பது? பூங்கொடியே"[4]

(1) பெரியபு. வெள்ளா 20. (2) ஷை 21.
(3) பெரியபு கழறிற் 69. (4) பொன் அந் 19.

என்று உரைக்கின்றாள். தன்னால் பழியாவதும், பெண்மை நலம் போவதும் ஆகூழும் போகூழுமாம் என்ற கருத்தை எடுத்தோதி,

"ஆவன யாரே யழிக்கவல் லார் அமை யாவுலகில்
போவன யாரே பொதியகிற் பார் புரம் மூன்றெரித்த
தேவனைத் தில்லைச் சிவனைத் திருந்தடி கைதொழுது
நீவினை யேன் இழந் தேன்கலை யோடு செறிவளையே"[1]

என்று மற்றவள் விடையிறுக்கின்றாள். இப் பகல் நிகழ்ச்சி அவள் நெஞ்சை யலைப்ப, இரவில் சிறிது கண்ணயர்ந்து கனவு காண்கிறாள். அக்கனவில் பரமன் பலி வேண்டி வரத், தான் பலியிட்டு மேனி வேறுபடுவதாகவும், தாயர் தடுப்பதாகவும், தன்னைப் பரமன் அப்போது வாவென அழைப்பதாகவும் கண்டு கண்விழித்து வருந்துகின்றாள். இச் செயலைச் சேரமான்,

"ஈசனைக் காணப் பலிகொடு செல்ல எற்றே இவளோர்
பேயனைக் காமுறு பிச்சி கொலாம் என்று பேதையர்முன்
தாய்எனை ஈர்ப்பத் தமியேன் தளர அத் தாழ்சடையோன்
வாஎனைப் புல்லஎன் றான்இமை விண்டன வாட்கண்களே"[2]

என்று பாடிக் காட்டுகின்றார்.

இங்ஙனம் கனாக்கண்டு வருந்தும் இவள் மெலிவு கண்ட அன்னை மிகவும் மனம் நொந்து மகளைப்பார்த்து,

"செப்பன கொங்கைக்குத் தேமலர்க்
கொன்றை நிறம்பணித்தான்;
மைப்புரை கண்ணுக்கு வார்புனற்
கங்கைவைத் தான்; மனத்துக்கு
ஒப்பன இல்லா ஒளிகிளர் உன்மத்த
மும்அமைத்தான்;
அப்பனை, அம்மனை! நீஎன் பெருது
நின்று ஆர்க்கின்றதே."[3]

(1) பொன் அந். 84. (2) ஷை 2. (3) ஷை 49.

என்று சொல்லி அவலிக்கின்றாள். இம்மகள் பின்பு தன் தோழியை நோக்கிப் பரமன்பால் தூதுவிடக் கருதி, "தோழி, நீ பரமனிடம் சென்று என் மனநிலை மொழிந்து அவன் கூறும் மொழி கேட்டு வருதல்வேண்டும்," என்பாளாய்,

" ஓது அவன்நாமம், உரை அவன் பல்குணம்,
உன்னைவிட்டேன்,
போது அவன்பின்னே, பொருந்து அவன்வாழ்க்கை
திருந்தச்சென்று,
மாதவ மாகிடு, மாதவன் மாவளர்
புன்சடையான்
யாதவன் சொன்னன் அதுகொண்
டொழியினி ஆரணங்கே."[1]

என்று மொழிந்து செல்ல விடுகின்றாள்.

இஃது இங்ஙனமாக, மகளிர் இருவர் ஒரு சொல்லாடல் நிகழ்த்துகின்றார்கள். ஒருத்தி, "இறைவன் முதற்கண் செற்றது காமனையே" என்கின்றாள்; மற்றவள் "காலனையே முதற்கண் செற்றார்" என்று கலாய்க்கின்றாள். அவர்க்கு நடுவாக நின்ற ஒருத்தி நேரே பரமனையடைந்து உண்மை துணிய முயன்று, அவன் ஒன்றும் உரையாமை கண்டு உரைப்பாளாய்,

" காமனை முன்செற்ற தென்றாள் அவள்,
இவள் காலன் என்னும்
தாமநன் மார்பனை முன்செற்ற தென்று
தன் கையெறிந்தாள் ;
நாம்முனம் செற்றதன்று யாரைஎன் றேற்கு
இரு வர்க்குமஞ்சி
ஆமெனக் கிற்றிலர் அன்றெனக் கிற்றிலர்
அந்தணரே"

என்றுரைத்து மகிழ்கின்றாள். இவ்விருவரையும் கங்கையும் உமையுமாக வைத்து உரை கூறுவதும் உண்டு. இப்படியே,

(1) பொன் அர். 54.

பரமனுக்குப் பலியிடச் சென்ற பெண்ணொருத்தி நிகழ்த்திய சொல்லாட்டினை நம் சேரமான்,

" அந்தண ராம்இவர் ஆரூர் உறைவதென்
றேன், அதுவே,
சந்தனை தோளி! என்றார்; தலையாய
சலவர் என்றேன்;
பந்தணை கையாய்! அதுவுமுண் டென்றார்;
உமைஅறியக்
கொந்தணை தாரீர்! உரைமின்என் றேன்;
துடி கொட்டினரே "

என்று இன்புறப் பாடி நம்மை மகிழ்விக்கின்றார். இத் திருவந்தாதிக்கண் இத்தகைய பாட்டுக்கள் பலவுள்ளன.

இனி, திருவாரூர் மும்மணிக் கோவைக்கண் வரும் முப்பது திருப் பாட்டுக்களும் அகனைந்திணைக் குரிய பாட்டுக் களாகவே உள்ளன. களவுவழி யொழுகிக் கற்புக்கடம் பூண்டு நிற்கும் தலைமக்கள் வாழ்வில் தலைவன்பால் பிரிவு நிகழ்கிறது; வினையே ஆடவர்க்கு உயிராதலின் அவன் பிரிவதும் அறமாகின்றது; பிரிந்து செல்பவன், தான் கார்ப் பருவ வரவில் வருவதாகக் கூறித் தலைமகளைத் தேற்றிச் செல்கின்றான். அவளும் அவன் தெளித்த சொல் தேறி யிருக்கின்றாள். ஆயினும் பிரிவுத் துன்பம் அவளை மட்டில் வருத்தாமல் இல்லை. அவள் வருந்துவதும் தோழி தேற்றத் தேறுவதுமாக இருந்து வருகின்றாள். தலைவன் குறித்த கார்ப்பருவம் வருகிறது; அவன் வருகின்றானில்லை. அதனால் தோழி, தலைவி ஆற்றாளாவள் என்று எண்ணி,

" கண்ணார் நுதலெந்தை காமரு கண்டம்
என இருண்ட
விண்ணால் உருமொடு மேலது, கீழது
கொண்டல் விண்ட

மண்ணார் மலைமேல் இளமயி லால்மட
மான் அனைய
பெண்ணா மிவள்இனி என்னைக் கழியுர்
பிரிந்துறைவே''[1]

என்று சொல்லி வருந்துகின்றாள். பின்பு தலைமகன் போந்து கூடி இன்புறுகின்றான். அவன் மறுபடியும் பரத்தையிற் பிரிந்தொழுகுகினறான். அத்தகையோன் ஒரு நாள் தன் மனைக்கு வந்தபோது தோழி முதலாயினார் வாயில் மறுக்க ஆற்றாமையே வாயிலாக வந்தடைகின்றான். அடைந்தவன் தலைவியைத் தீண்டிடுனாக, அவள் புலந்து,

''பொய்யார் தொழலும் அருளும் இறைகண்டம்
போல்இருண்ட
மையார் தடங்கண் மடந்தையர் கேட்கின்
பொல்லாது, வந்துன்
கையால் அடிதொடல், செல்லஎற் புல்லல்,
கலைஅலையல்;
ஐயா, இவைநன்கு கற்றாய்; பெரிதும்
அழகியவே''[2]

என்று உரைக்கின்றாள். பரத்தையை உயர்த்துக் கூறும் கருத்தால், அவர்களைப் "பொய்யார் தொழலும் அருளும் இறை கண்டம்போல் இருண்ட மையார் தடங்கண் மடந்தையர்" என்கின்றாள். மெய்ம்மையன்பு பூணாது பொய்யன்பு பூண்டு பரவினும் பரமன் அருள் புரிவதுபோல, பொய்யே ஒழுகினும் அம்மகளிர் நின்னை யேற்பர்; யாம் ஏலேம்; அவர் பாலே செல்க என்பது கருத்து. "கற்பு வழிப்பட்டவள் பரத்தையேத்தினும் உள்ளத்தூடல் உண்டு" என்பது தொல்காப்பியம். இவ்வாறு தலைவி தலைவனைப் புலந்து பரத்தையரை உயர்த்திக் கூறியது பரத்தைக்கு எட்டுகிறது. அவள் தலைவியைப் புறனுரைக்கின்றாள். அச்செய்தி தலைவிக்குத் தெரிகிறது. தலைவி வெகுண்டு, பரத்தையர் ஒருவரல்லர்,

(1) திருமும் 3. (2) திருமும் 21.

பலர் உளராயினும் தலைவன் எனக்கே உரியனுவான்; எப்படி யெனின், ஒரு குளத்தில் பல்லாயிரம் ஆம்பல்கள் நெருங்க மலர்ந்திருப்பினும், தாமரை ஒன்று உளதாகிய வழி, அக்குளம் தாமரைக்குளம் என்றே உரைக்கப்படும்", என்ற கருத்துத் தோன்றத் தன் தோழியை நோக்கி, பரத்தைக்குப் பாங்காயினர் கேட்ப,

" திறமலி இன்மொழிச் செந்துவர் வாயினை
    எங்கையர்க்கே
மறமலி வேலோன் அருளுக; வார்சடை
    யான்கடவூர்த்
துறைமலி ஆம்பல் பல்லாயிரத்துத்
    தமியேனழினும்
நறைமலி தாமரை தன்னதன் றேசொல்லும்
    நற்கயமே "[1]

என்று நவிலுகின்றாள்.

இத்திரு மும்மணிக்கோவைக் கண் வரும் திருப்பாட்டுக் கள் பலவும் சங்கத் தொகை நூற்களிற் காணப்படும் கருத்துக்கள் பலவற்றை உட்கொண்டு நிற்கின்றன.

" மனையுறை குருவி வளைவாய்ச் சேவல்
சினைமுதிர் பேடை செவ்வி நோக்கி
ஈனில் இழைக்க வேண்டி ஆறு
அன்பு பொறைகூர மேன்மேல் முயங்கிக்
கண்ணுடைக் கரும்பின் நுண்தோடு கவரும்[2] "

என்ற இம் மும்மணிக்கோவைப் பாட்டுக் குறுந்தொகை யில் வரும்.

" உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்,
சூல்முதிர் பேடைக்கு ஈனில் இழைஇயர்
தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்
நாறா வெண்பூக் கொழுதும்[3] "

என்ற பாட்டை நினைப்பிக்கின்றது. இவ்வாறே,

(1) திருமுகம் 24. (2) ஷை 13. (3) குறுந். 85.

"பட்டோர் பெயரும் ஆற்றலும் எழுதி
நட்டகல்லும் மூதூர் நத்தமும்,
பரன்முரம் பதரும் அல்லது படுமழை,
வரன்முறை யறியா வல்வெயிற் கானத்து"[1]

என்பது அகநானூற்றையும்,[2]

"புனமயிற் சாயல் பூங்குழல் மடந்தை,
மனைமலி செல்வம் மகிழாளாகி
ஏதிலொருவன் காதலனைக"

என்பது நற்றிணையையும்[3] பிற பிறவற்றையும் நினைப்பிக்கின்றன.

இன்ன நலம் சான்ற திருமும்மணிக்கோவையைப் பாடி, "நன்மை விளங்க," நம்பியாரூரரைக் கேட்பித்த சேரமான் அவருடன் பல தலங்களையும் காணச் செல்கின்றார் செல்பவர் திருமறைக் காட்டில், நம்பியாரூர் "யாழைப் பழித்து" என்னும் திருப்பதிகம் பாட, நம் சேரமான் திருவந்தாதியில், மறைக்காடனைப் பாடியுள்ள, "துயரும் தொழும் அழும் சோரும் துகிலும் கலையும் செல்லப், பெயரும் பிதற்றும் நகும் வெய்துயிர்க்கும் பெரும் பிணி கூர்ந்து, அயரும் அமர்விக்கும் மூரி நிமிர்க்கும் அந்தோ இங்ஙனே, மயரும் மறைக்காட்டு இறைக்காட்டகப்பட்ட வாணுதலே[4]" என்ற திருப்பாட்டையோதுகின்றார். இதனைச் சேக்கிழார் பெருமான், "அருட் சேரர், சிறந்த அந்தாதியில் சிறப்பித்தனவே ஓதித் திளைத் தெழுந்தார்[5]" என்று பாடுகின்றார்.

பின்னர் இவர் நம்பியாரூரருடன் மதுரைக்குச் சென்று மதுரைச் சொக்கேசனைக் கண்டு பரவுமிடத்து, தமக்கு அப் பரமன் விடுத்த திருமுகப் பாசுரத்தால் செய்த திருவருளை வியந்து, "அடியேனைப் பொருளாக அளித்த திருமுகக் கருணை, முடிவேது என்றறிந்திலேன்[6] என்று சொல்லி

(1) திருமும். 16. (2) அகம் 131. (3) நற் 110.
(4) பொன். அந். 37. (5) கழறிற். 87. (6) ஷை 94.

மொழி தடுமாறி மனங் குழைகின்றார். இவ்வாறு நம்பி யாரூரர் தோழமை பெற்றுச் சிறக்கும் சேர வேந்தர் அவ ருடனே திருவாரூர்க்கே திரும்ப வந்து சின்னாளிருந்து, அவரை யும் உடனழைத்துக்கொண்டு தம் சேரநாட்டிற்குச் செல் கின்றார். வழியில் திருவையாற்றுக்குச் செல்லாவகையில் காவிரி பெருகக் கண்டு நம்பியாரூரரை வேண்ட, அவர் திருப் பதிகம் பாடியதும் காவிரியில் வழியுண்டாகிறது. அதுகண்டு வியந்த வேந்தர் நம்பியாரூரரை அடிபணிந்து போற்றுகின்றார். நம்பியாரூரர் இறைவன் சேரமானுக்குத் திருமுகம் விடுத்தும், திருச்சிலம்போசை காட்டியும் சிறப்பிக்கும் திறத்தை நன் கறிந்தவராதலின், காவிரி வழிவிட்டதும் அவர் பொருட்டே என்பது உணர்ந்து, அவரடியில் தாம் வீழ்ந்து வணங்கு கின்றார். இதனை "நம்பி பாதம் சேரமான் பெருமாள் பணிய நாவலூரர்ச், செம்பொன் முந்நூல் மணிமார்பர் சேரர் பெரு மாள் எதிர்வணங்கி, உமபர் நாதர் உமக்களித்ததன்றே[1]" என்று உரைத்து மகிழ்ந்தாரென்று சேக்கிழார் பெருமான் செப்புகின்றார்.

இவ்வாறு ஐயாறப்பன் திருக்காட்சிபெற்றுச் சிறப் பெய்திய இருவரும் பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு சேரநாடு அடைந்து அந்நாட்டவர் எதிர்கொள்ளச் சேரவேந்தர் திருமனையை அடைகின்றனர். அங்கே பன்னாள் அவருடன் தங்கிய நம்பியாரூரர், திருவாரூரில், வேந்தருடன் கூடி, நிலைச்செண்டு வீசல், பரிச்செண்டு வீசுதல், தகர்ப் பாய்ச் சல் காண்டல், கோழிப்போர் பார்த்தல் முதலியவற்றால் மகிழ்ச்சியுற்றதுபோல,

"செண்டாடுந் தொழில்மகிழ்வும்
சிறுசோற்றுப் பெருஞ்சிறப்பும்
வண்டாடு மலர்வாவி மருவியநீர் விளையாட்டும்
தண்டா மும்மத கும்பத் தடமலைப்போர் சலமற்போர்[2]"

முதலியன கண்டு மகிழ்கின்றார். பின்பு நம்பியாரூரர் சேர மான் பால் விடைபெற்றுத் திருவாரூர்க்குப் புறப்படுங்கால்,

(1) கழறிற் 137. (2) ஷை 155.

